12th August 1960]

(ஆ) அந்தத் தொழிற்சாலையில் மாநில அரசாங்கம் பங்கு கொள்ளுமா? எந்த அளவுக்கு?

THE HON. SRI R. VENKATARAMAN : (அ) Yes Sir,

(ஆ) The State Government will assist the promotion in the establishment of this Industry to the extent necessary.

SRI S. M. ANNAMALAI : அதற்குச் செலவாகக் கூடிய மதிப்பீடு எவ்வளவு என்று சொல்ல முடியுமா? பிற நாடுகளில் இருந்து உதவி கிடைக்கிறதா?

THE HON. SRI R. VENKATARAMAN : இது இப்போது பூர்வாங்க நிலையில்தான் இருக்கிறது. சற்றேறக்குறைய 11, 12 கோடி ரூபாய் ஆகுமென்று எதிர்பார்க்கப்படுகிறது. வெளி நாட்டிலிருந்து வரக்கூடிய உதவி 2½ கோடி அல்லது 3 கோடி இருக்கலாம். இதெல்லாம் "ப்ரொவிஷனல்" மதிப்பீடுதான்.

SRI P. U. SHANMUGAM : யாருக்கு இந்தத் தொழிற் சாலையை ஆரம்பிப்பதற்காக அனுமதி வழங்கப்பட்டிருக்கிறது என்பதை அமைச்சர் அவர்கள் சொல்வார்களா?

THE HON. SRI R. VENKATARAMAN : அவசியமில்லை.

SRI P. S. CHINNADURAI : இந்த அலுமினியத் தொழிற்சாலை மேட்டூரில் நிர்மாணிக்கப்படயிருக்கிறதா அல்லது ஈரோடு அருகில் பள்ளிப்பாளையத்தில் நிர்மாணிக்கப்பட இருக்கிறதா?

THE HON. SRI R. VENKATARAMAN : வெளி நாடுகளில் இருந்து வந்துள்ள நிபுணர்கள் எங்கே நிர்மாணிக்கவேண்டு மென்று சொல்கிறார்களோ அதைப் பொறுத்துத்தான் எங்கே நிர்மாணிப்பது என்பது நிர்ணயிக்கப்படும்.

SRI M. KALYANASUNDARAM : இந்தத் தொழிற்சாலை நிறுவப்பட்டால் எத்தனை தொழிலாளர்களுக்கு அதிகமாக வேலை வாய்ப்பு கிடைக்கும்?

THE HON. SRI R. VENKATARAMAN : It is too early to foresee. But the object of a big industry like aluminium and iron and steel is not to provide so much direct employment as secondary and tertiary employment. A number of small-scale industries will develop in and around a heavy industry like aluminium. They can use ingots for various fabrication purposes.

*Road Transport workers*

* 137 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) இம் மாநிலத்தில் ரஸ்தா போக்குவரத்துத் தொழிலாளர் பாதுகாப்புச் சட்டம் செய்யும் உத்தேசம் அரசாங்கத்திற்கு உண்டா? அப்படியானல், அதன் விபரமென்ன?

[12th August 1960

(ஆ) மத்திய அரசாங்கம் இவ்விஷயமாய் சட்டம் செய்வது பற்றி நம் அரசாங்கத்தை ஏதேனும் கேட்டிருக்கிறார்களா? அப்படியானால் அதன் விபரமென்ன?

THE HON. SRI R. VENKATARAMAN : (a) No, Sir. In 1959 the Minister for Industries desired that a Bill be prepared to regulate the conditions of employment in Motor Transport Industry. But Government of India stated that a Central Bill was under contemplation.

(b) A draft Bill of the Government of India has been referred to this Government for comments and it is under consideration.

SRI A. VEDARATHNAM : இந்திய அரசாங்கம் இதற்காகச் சட்டம் செய்தால் அது நம்முடைய மாநிலத்திற்கும் பொருந்துமா அல்லது அதை அனுசரித்து வேறு சட்டம் இங்கே நிறைவேற்றப் பட வேண்டுமா?

THE HON. SRI R. VENKATARAMAN : மத்திய சர்க்கார் நிறைவேற்றினால் அது அகில இந்தியாவுக்கும் பொருந்தும்.

*Pisciculture*

*138 Q.—SRI P. G. MANICKAM : கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

1960-ல் சென்னை ராஜ்யத்தில் எத்தனை குளங்களிலும், விவசாய நிலத்திலிருக்கும் கிணறுகளிலும் மீன் வளர்ப்புத திட்டம் அமுலாக்கப்பட்டிருக்கின்றது?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : Sir, during the year 1959–60 fish culture operations were undertaken by the Fisheries Department in 4,188 tanks and in 160 irrigation wells in paddy fields.

SRI P. G. MANICKAM : ஸார், மீன் வளர்ப்புத் திட்டமானது ஒரு முக்கியமான திட்டமாகும். ஆகவே, இத்திட்டத்தில் என்னென்ன காரியங்கள் நடைபெற்று வருகின்றன என்பதைப் பற்றி ஒரு ஜாபிதாவைத் தயாரித்து மெம்பர்களுக்கு வழங்குவது மிகவும் நல்லது. அந்த ஜாபிதாவில் எத்தனை மீன் குஞ்சுகள் வளர்க்கப்பட்டன, எத்தனை நீர்த் தேக்கங்களில் வளர்க்கப்பட்டு வருகின்றன, இன்னும் எத்தனை குளங்களில் வளர்க்கத் திட்டம் இருக்கின்றன என்ற புள்ளி விவரங்கள் அடங்கிய . . . .

MR. SPEAKER : The hon. Member is making a suggestion. He can only put a question.

SRI P. G. MANICKAM: ஒரு ஜாபிதாவைத் தயாரித்துக் கொடுக்க முடியுமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : 1959-60-ல் 4,188 குளங்களில் 23.72 லட்சம் மீன் குஞ்சுகளும் 160 குளங்களில் 11,570 மீன் குஞ்சுகளும் விடப்பட்டிருக்கின்றன.